VOL. LXXVIII. No. 9. SEPTEMBER 1941.

# அருணோதயம்

# ARUNODAYAM

THE

## TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Church of Sweden Mission,
the Tamil Evang. Lutheran Church and the Danish Mission

நீதிமான்களின் ரட்சிப்போ யெகோவாவினால் வரும்.
சங். 37 : 39.

பொருள் அட்டவணை. பக்கம்.



PRINTED AT
JEGAM & Co., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1941

## துக்க அறிவிப்பு

எனது அருமை தலை புதல்வர் O. J. பீற்றர் உபா. கடந்த 8 வருடங்களாக த. ச. லு. சபையில் பாண்டூர் கொண்டஞ்சேரி பல இடங்களிலும், தமது பிறந்தகமாகிய பூவல்லிக்குப்பத்திலும் சபை பள்ளிக்கூட வேலைகளை ஊக்கமும் உண்மையுமாயுழைத்து மேலானவர்களால் நற்பெயர்பெற்று, சில காலம் வியாதியாயிருந்து பல சிகிச்சைகள் செய்தும் பூரண சுகமடையாமல் 3—7—41ல் வியாதி மும்முரமாகி, தனக்கு மரண நேரம் சமீபித்ததென் றுணர்ந்து பெற்றோர் பந்துக்கள் முதலானவர்களுடன் கர்த்தரைப்பற்றிய கடைசிகால சம்பாஷணைகள் செய்து 7-4-41 இரவு 7 மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரையடைந்தார். மறு நாள் (5-7-41) துக்கவீட்டில் சங். C. G. Diehl ஐயரவர்கள் துக்க ஆராதனை நடத்தியபின் ஏராளமான பந்து மித்திரர்கள், பஜனை வாலிபர்கள், உபாத்திமார்களுமாகப் புடைசூழ கல்லறைக்குக்கொண்டுசென்று கனம் J. S. ஆசீர்வாதம் பிரசங்கியார் அவர்களால் சகல கிறிஸ்தவமரியாதைகளுடன் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 25.

அச்சமயம் வந்திருந்து வேதவசனங்களாலும், நல்வார்த்தைகளாலும் எங்களுக்கு நல்லாறுதல் சொல்லிய நண்பர்களுக்கு எங்கள் மனமார்ந்த வந்தனம்.

"பிரிந்துபோய் கிறிஸ்துவுடனே இருக்க எனக்கு ஆசையாயிருக்கிறது" (பிலி 1·23)

| | |
|---|---|
| P. O. யோசுவா மூப்பனர் | P. N. ஆண்டு, உபாத்தியாயர் |
| P. தாவீது | Miss P. சாமுவேல் ,, |
| P. மலையப்பன் | Mrs. S. சாந்தம்மாள் ,, |

பூவல்லிக்குப்பம், 5-8-41

---

## மரண அறிக்கை

எங்களது அருமை தகப்பனர் சாப்பேர் பொன்னங்கூடம் எனும் தேவசகாயம் செட்டியார் அவர்கள், நாளது வருடம் ஜூலை மாதம் 27ம் தேதி, இரவு 9-50க்கு தமது விருத்தாப்பிய வயதில் கர்த்தருக்குள் அமைதியாய் நித்திரை யடைந்தார். அவரது சடலம் மறுநாள் துக்க கிரகத்திலிருந்து சபையின் பாடகர் குழாம் புடை சூழ ஊர்வலத்துடன் மதுரை இரட்சண்ய ஆலயம் கொண்டுபோகப்பட்டு, திருச்சி கனம் I. A. அப்பாத்துரை ஐயரவர்கள் துக்கப்பிரசங்கம் செய்ய, கனம் S. W. சவரிமுத்து ஐயர் துக்க ஆராதனை செய்தபின், மதுரை லூத்தரன் சபையின் உத்தான தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது.

பிறந்த தேதி 27-1-1887. இறந்த தேதி 27-7-1941.

மல்கியா 2:6.

Madura
15-8-1941

Dr. (Miss) S. DEVESAHAYAM.
D. GNANAUCHITHAM.




தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. GNANAMANICKAM, &
Mr. G. T. WILLIAMS, B. A., L. T.

| No. 9 | செப்டம்பர் | 1941 |
|---|---|---|

## தியானம்

**ஆவியை அணைத்துப் போடாதிருங்கள். 1 தெச. 5 : 19.**

தேவாவியானவரின் சத்தம் மந்த மாருதத்தைப்போல் மென்மையானது. கடவுளோடு நீ நெருங்கிய ஐக்கியத்தில் பிழைத்தாலன்றி அது உன் செவியில் விழாது. அசாதாரண சாந்த முறைகளைக் கையாடி தேவாவியானவர் உன் நடைகளைத் திருத்தப் பார்ப்பார். அவருடைய சத்தத்தை அறிந்துகொள்ளும் உணர்ச்சி உனக்கில்லாவிட்டால் அதை நீ அணைத்துப் போடுவாய். அதினால் உன் சொந்த ஆவிக்குரிய ஜீவியம் பழுதாகிவிடும். ஆவியின் அசைவுகள் எப்போதும் மெல்லிய அமர்ந்த சத்தத்தில் வெளிப்படும். மெய்பக்தனேயன்றி வேறொரும் அதைக் கவனிக்கமுடியாது.

"பல வருஷங்களுக்கு முன்னே நான் ரட்சிக்கப்பட்டேன்" என்று நீ கிறிஸ்தவ சாட்சி பகர நேரிடுமானால் காரியங்கள் சரியாயில்லை என்று சந்தேகிக்க இடமுண்டு. நீ வெளிச்சத்தின் பாதையில் நடந்துகொண்டேயிருப்பாயாகில், நீ திரும்பிப்பார்க்க அவசியமில்லை. கடவுளின் ஐக்கியத்தில் பிழைக்கும் தற்கால அதிசய ஜீவியத்திற்குள் உன் கடந்தகாலமும் புதைந்து கிடக்கும். நீ வெளிச்சத்துக்குப் புறம்பாகிவிட்டால் உன்

ஜீவியம் கடந்தகால ஜீவியத்தின் ஞாபகத்தால் மாத்திரம் நடத்தப்பட்டு உயிரற்றதாகிவிடும். உன் சாட்சி பகருதலும் வெறும் வார்த்தைகளாய்த்தானிருக்கும். தேவாவியின் ஏவுதலை உணர்ந்தவுடனே நீ நின்று உன்னைத் தற்சோதனைசெய்து ஆண்டவரோடு உனக்குள்ள சம்பந்தத்தைச் சீராக்கிக்கொள்ளவேண்டும். மற்றப்படி நீ மீட்கப்படும் நாளுக்கென்று முத்திரையாகப்பெற்ற கடவுளின் பரிசுத்த ஆவியைத் துக்கப்படுத்துவாய்.

கடவுள் உன்னை ஒரு நெருக்கடிக்குள் கொண்டுவந்துவிட்டாரென்று வைத்துக்கொள். அதிலிருந்து நீ ஒருவாறு சமாளித்துக்கொள்ளப் பார்க்கிறாய். மறுபடியும் வேறொரு நெருக்கடிவரும். அது அவ்வளவு கடுமையாய்த் தோன்றாது. வரவர கடவுள் உனக்குத் தூரமாவார். கீழ்ப்படியாமையினால் நீ இன்னம் அவமானத்துக்குள்ளாவாய். ஆயினும் அதின் மூலமாய் நீ படிக்கவேண்டியதைக் கற்றுக்கொள்வாயானால் நீ ஸ்தோத்திர ஜீவியத்துக்கு வழிநடத்தப்படுவாய். மற்றப்படி நீ கடவுளைத் துக்கப்படுத்திக்கொண்டேபோய், ஆவியை அணைத்துப் போடுவாய்.

உன்னுடைய ஜீவியம் எப்படி? தேவாவியின் ஏவுதலை உன் ஜீவியத்தில் கண்டுணர்ந்து அதற்குக் கீழ்ப்படிகிறாயா? உன் கீழ்ப்படியாமையால் அவரைத் துக்கப்படுத்துகிறாயா? அவர் உன்னைச் சங்கடநிலைமையில் வைக்கும்போது அவருடைய நோக்கத்தை அறியப் பிரயாசப்படுகிறாயா? அல்லது சங்கடத்திலிருந்து தப்பிக்கொள்ள மாத்திரம பிரயாசப்படுகிறாயா? தற்கால திருச்சபையின் நிலைமையைப்பற்றி ஆண்டவர் சந்தோஷப்படுவாரா? தேவாவியின் சத்தத்தை நாம் கேட்டு அதற்குக் கீழ்ப்படிகிறோமா? அல்லது அவரைத் துக்கப்படுத்துகிறோமா? ஆவியை அணைத்துப் போடுகிறோமா? ஆவியின் விளக்கு அணைந்துபோகுமானால் நாம் இருளின் பிரபுவின் வலையில் சிக்குவோம். அன்பின் தீ அவிந்துபோகுமானால் பகையின் தீ நமக்குள் பற்றி எரியும். அன்பின் அவதார புருஷன் நமக்கு அரசனாயிராமல், மனுஷ ஜாதியின் கொலை பாதகனாகிய சாத்தான் நம்மை ஆளுகை செய்ய நேரிடும்.

———:———

## பத்திராதிபர் குறிப்புகள்

தாம்பரத்தில் கூடும் அகில இந்திய வுத்தரன் வாலிபர் மகாநாட்டை ஆண்டவர் தமது திருநாம மகிமைக்கென்றும், திருச்சபையின் ஆசீர்வாதத்திற்கென்றும் சித்திபெறச் செய்ய



நாமனைவரும் ஜெபிப்பது நமதுமேல் விழுந்த கடமை. அந்த குருசேகரத்திலிருந்து ஊக்கம் நிறைந்த வாலிப ஸ்தானாபதிகளை அனுப்பக் கோருகிறோம். ஆண்கள் மாத்திரமல்ல, பெண்களும் இதில் பங்கு பெறுவார்களென எதிர்பார்க்கப்படுகிறது.

வாலிபர் மகாநாட்டின் சம்பந்தமாக நமது சுதேச மிஷனெரி சங்கத்தின் (N. M. S.) வெள்ளி ஜூபிலியையும் செப்டம்பர் 21௳ கொண்டாட ஏற்பாடாகியிருக்கிறது. நமது மிஷனெரியாகிய சங். S. ஞானாபரணம் ஐயரும் அச்சமயத்தில் நமது நடுவே இருப்பது நமது சந்தோஷத்தை அதிகரிக்கச் செய்யும். ஜூபிலி கொண்டாட்டத்தின் சம்பந்தமாக நமது சபைகள்தோறும் விசேஷித்த சேர்ப்புகள் செய்வார்களென நம்புகிறோம். புதிய மிஷனெரி ரீவாவுக்கென நியமனம்பெற்றுப் போயிருப்பதால் வருஷாந்தர செலவுகள் அதிகப்பட்டிருப்பதையும், மார்வாஹி ஆஸ்பத்திரி சம்பந்தமான வேலைகளையும் உத்தேசித்து N. M S. சிநேகிதர் தங்கள் வழக்கமான கொடைகளோடு இன்னும் விசேஷித்த சேர்ப்புகளையும் செய்தனுப்பக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். இதையன்றி நமது சபைகளை சந்தித்து N M. S. வேலையைப்பற்றிப் பேசவும், ஜூபிலி சந்தோஷத்தை நமக்குப் பெருகச் செய்யவும் சங். ஞானாபரணம் ஐயர் தமது குடும்பத்தோடு வருகிறபடியால் அவருடைய பிரயாண சம்பந்தமான செலவுகளுக்காகவும் சபைகள்தோறும் விசேஷித்த சேர்ப்புகளைச் செய்யும்படி கேட்டுக்கொள்வதென்று சென்னையில் கூடிய கமிட்டியில் தீர்மானமாயிற்று. இந்த நோக்கத்திற்காகச் செய்யும் சேர்ப்புகளைக் காலதாமதமின்றிப் புதுக்கோட்டை, C. S. M. High School Headmaster M Devasahayam, B.A , L T. அவர்களுக்கு அனுப்பவேண்டும். அனுப்பப்படும் தொகைகளைப்பற்றி அருணோதயத்தில் பிரசுரமாகும்.

———:———

## N. M. S. சிநேகிதருக்குச் சில யோசனைகள்

சென்ற ஜூலை 3௳ சென்னையில் கூடிய கூட்டத்தில் நமது மிஷனெரி ஊழியம் வளர்ந்து வருவதால் இதில் கரிசனமும் பணச்சேர்ப்பில் ஊக்கமும் அதிகரிக்க என்ன செய்யலாமென்று கலந்தாலோசித்ததின் பலனாகப் பின்வரும் யோசனைகள் சொல்லப்பட்டன :—

1. முற்காலத்தில் செய்து வந்தபடி ஒவ்வொரு சபையிலும் மாதமொரு முறை மிஷன் தேவாராதனை நடத்துவது நல்லது. ஜனங்கள் அதில் ஊக்கமாய்ப் பங்குபெறத் தக்க

தாக ஏற்கனவே அறிவித்து இவ்விசேஷித்த ஆராதனையை நடத்தலாம். மாலையில் 4 மணிக்குப் பதிலாக 6 மணிக்கு இவ்வாராதனையை நடத்தினுல் பல இடங்களில் அதிகப் பேர் வரக்கூடும்.

2. சுவிசேஷப் பிரபல்லிய ஆவியைக் காப்பாற்றவும், சபையின் அவயவங்கள், குடும்பங்களில் N. M. S.-க்குப் பொருள் சேர்க்கவும் சபை குருக்கள் அந்தந்த சபைகளில் தகுந்த சிநேகிதரை நியமித்து வைக்கலாம்.

3. குடும்பங்களில் ஒவ்வொரு அவயவமும் N. M. S. வேலைக்கென்று பண உதவிசெய்ய ஏவப்படவேண்டும். N.M.S. காணிக்கைப் பெட்டி ஒன்றை ஒவ்வொரு வீட்டிலும் கொடுத்து வைப்பது நல்லது. குறித்த தினங்களில் குருமாரும், N. M. S. சிநேகிதரும் இப்பெட்டிகளை வீடுகளுக்கு அனுப்பவும், பிறகு பணச்சேர்ப்பைக் கணக்கிடவும் ஒன்றாய் முயற்சி செய்யலாம்.

4. ஒருசந்தி காலத்தில் சுயவெறுப்பின் காணிக்கை சேர்க்க அச்சிட்ட கூடுகளை சாம்பற் புதன்கிழமையில் பரிமாறிப் பெரிய வெள்ளிக்கிழமையில் ஆராதனை துவக்க அரை மணி நேரத்துக்குமுன் பீடத்தின்மேல் அவைகளைக் கொண்டுவந்து வைக்க ஏறபாடு செய்யலாம்.

5. பள்ளிக்கூடங்களிலும், போர்டிங் விடுதிகளிலுமுள்ள பிள்ளைகள் விடுமுறை காலத்துக்கு வீடு செல்லுமுன் கட்டங்களுள்ள கார்டுகளை அச்சடித்து ஒவ்வொரு கட்டத்திலும் ஒரு அணுவுக்குக் குறையாமல் பணத்தண்டல் செய்து கொண்டுவர அவர்களை ஏவிவிடலாம். செப்டெம்பர் விடுமுறை நாட்கள் இதற்குத் தகுந்தவை.

———:———

## மர்வாஹி கடிதம் (N. M. S.)

மத்திய மாகாணங்களில் பொதுவாய் ஜூலை மாதம் மழை பெய்யும், நதிபெருகும்; பிரயாணஞ் செய்வது முற்றிலும் அசாத்தியமாகும். இதுபற்றி ஜூன் மாதம் சுதேச ராஜ்ய கிராமங்களில் பலவற்றை சந்திக்கப்போனும். சியோனி பள்ளிக்கூடத்தில் 25 வருஷங்களுக்குமுன் படித்த ஒரு பிராமணன் சுதேச ராஜ்யத்தில் இருப்பதாக நமது உபாத்திமாருக்குத் தெரியவந்தது. அவரோடு படிதத ஒரு பிராமணனை சியோனியிலிருந்து எங்களோடு கூட்டிக்கொண்டு 12 மைல் தூரத்திலுள்ள அக்கிராமத்துக்குப் போனேம், அவர் எங்களைப் பட்சமாய் வரவேற்ருர், அவர் அக்கம்பக்கத்து கிராம பிள்ளைகளுக்குப் பல வருஷங்களுக்குமுன் வாசிக்கக் கற்றுக்கொடுத்தார். தற்காலம் அவ்விடங்களில் பள்ளிகூடம் இல்லை. வாலிபர் பலர் அவர் வீட்டுக்கு வந்தார்கள். நாங்கள் பிரபு இயேசுவைப்பற்றிப் பேசினேம். சுவிசேஷ பிரதிகள் கொடுத்தோம். அவர்களோடு வாசித்தோம், அவர்கள் எங்களை மறுபடியும் வரக் கேட்டுக்கொண்டார்கள். நாங்கள் திரும்பும்போது, மழை அதிகம் பெய்தது. மழை அதிகமாய் பெய்யும் இருமாதங்களை உபயோகப்படுத்தும்படி, சுதேச ராஜ்யத்தின் எல்லைக்கு சமீபத்திலுள்ள கர்ஹனி என்ற கிராமத்தில் தங்கத் தீர்மானித்தேன். இங்கே நமது பழைய மாணக்கன் உண்டு. அவனுடைய சிறிய தகப்பன் வீட்டின் திண்ணையில் நான் குடியிருக்கிறேன். அவனுடைய தகப்பன் வீட்டு திண்ணையில் பள்ளிக்கூடம் வைத்திருக்கிறேம். காலையில் சிறு பையன்கள் படிக்கிறுர்கள், ராத்திரியில் வாலிபர். சிறுவர் தற்பொழுது ஏறக்குறைய 16 பேர், வாலிபர் 20 பேர். இவர்களோடு இரவுபகலாய் தங்கியிருப்பதால் சுவிசேஷ செய்தி கூற நற்சமயங்கள் கிடைக்கிறது. சுதேச ராஜ்ய கிராமங்களிலிருந்து அநேகர் வருகிறுர்கள். அவர்களோடு அறிமுகமாவதுமட்டுமல்ல, அவர்களுக்கும் நற்செய்தி சொல்லத் தருணங் கிடைக்கிறது. பல இரவுகளில் பஜனை செய்தோம். மேலும் இங்கிருந்து பல கிராமங்களுக்குப்போய் வந்தோம். கடந்த வாரம் இரண்டு பழைய கிராமங்களுக்குப்போய் பழைய மாணவரோடு சம்பாஷித்தோம். ஒரு புதிய கிராமத்தாரோடு அறிமுகமுமானேம்.

புதிய மிஷனரி கனம் B J. கிருபாதானம் அவர்கள் குடும்பத்தோடு பென்று வந்து சேர்ந்தார்கள். நான் அவரைக் காணப் போனபோது பெற்றேரும் பிள்ளைகளும் படுக்கையில் கிடந்தார்கள். சிகிச்சை பெறுவது அவ்வளவு சுலபமல்ல. மற்ற உதவி கிடைப்பதும் லேசல்ல. பாஷை யறியாமையால் அவர் படும் பாடும் அதிகம். காலையில் பால் வேண்டியதாயிற்று. பால்காரனைக் கூப்பிட்டார்கள். அரைப்படி பால் வேண்டுமென்று சைகையால் காண்பித்தார்கள், அவ்விதமே விலை பேசினர்கள். அவன் பேசினது இவர்களுக்கு விளங்கவில்லை, இவர்கள் பேசினது அவனுக்குப் புலப்படவில்லை. முடிவு பால் கிடைக்கவில்லை. அவர்கள் சரீர நிலைமையைவிட மனேநிலை பரிதபிக்கப்படத்தக்கது. கடைசியாக அவர்களை, பிலாஸ்பூர் என்கிற இடத்துக்குப் போக ஆலோசனை கொடுத்து நான் இவ்விடந் திரும்பினேன். பிலாஸ்பூரில் வீடு 10 ரூ. வாடகைக்கு அமர்த்தியிருக்கிறேம். ஹிந்தி படித்துக்கொடுக்க ஒரு முன்ஷியும் இருக்கிறர். இரண்டு

மூன்று மாதங்களில் பாஷை படித்து இவ்வேலையைக்கொண்டு நடத்தக்கூடியவராவார் என்பது நமது நம்பிக்கை. தற்சமயம் மழை இல்லாமையால் உஷ்ணம் கொடிது. மனுஷர் படுங் கஷ்டம் மிகுதி.

கர்ஹனி, 29—7—41 ஞானபரணம்.

———:———

## வாலிபர் பகுதி

### அகில இந்திய லுத்தரன் வாலிபரின் 3ம் மகாநாடு

சென்னை கிறிஸ்தவ கல்லூரி இருக்கும் தாம்பரத்தில் உள்ள Bishop Heber Hall இல் நாளது செப்டெம்பர்மீ 18உ முதல் 22உ வரையிலும் நடைபெறும். நமது சபையைச் சேர்ந்த சேகரங்களிலுள்ள ஆங்கிலமறிந்த வாலிப சகோதரர் சகோதரிகள் இதில் பங்குபெற அழைக்கப்படுகிறார்கள். தற்கால உலக நிலையால் ஏற்பட்டிருக்கும் சங்கடங்களைத் தைரியத்தோடு மேற்கொண்டு, திருச்சபைக்குப், ஜன சமூகத்திற்குமுள்ள தங்கள் கடமைகளை நிறைவேற்ற ஏவுதலடைவதே இம் மகாநாட்டின் நோக்கம். இதில் பங்குபெற விரும்புவோர் செப்டெம்பர்மீ 10உக்குள்ளாக திருச்சி, தரங்கை வாசத்திலிருக்கும் காரியதரிசி D. D. அனுக்கிரகம் M. Litt., B. D., அவர்களுக்குப் பிரவேசக்கட்டணம் ஒரு ரூபாயோடு மனுப் பண்ணிக்கொள்ளவேண்டும். மனுவில் சபை குருவாகிலும், அவர்கள் பாடசாலையின் தலைவராகிலும் கையெழுத்திட்டிருக்க வேண்டும். சாப்பாட்டு செலவு பிரத்தியேகம்: தினம் ஒன்றுக்கு 12 அணு, ஐந்து நாட்களுக்கும் ரூ. 3. வருவோர் தங்கள் வேதாகமம், படுக்கை, குடிக்கும் பாத்திரம், குறிப்புப்புத்தகம் முதலியவைகளைக்கொண்டு வருவது அவசியம். மகாகனம் தரங்கை அத்தியக்ஷர் J. Sandegren சாஸ்திரியார், கனம் R. B. மாணிக்கம் சாஸ்திரியார், Rev. Dr. Dolbeer, சங். Joel Lakra ஐயர், சங். S. ஞானபரணம் ஐயர், சங். P. பரதேசி ஐயர், சங். S. W. சவரிமுத்து ஐயர், திரு. J. D. ஆசீர்வாதம், திரு. S. தேவநேசன், திரு. D. D. அனுக்கிரகம் முதலியோர் இம் மகாநாட்டில் சொற்பொழிவுகள் செய்வார்கள்.

### மதுரை இரட்சணிய ஆலய வாலிபர் கூட்டம்

மதுரை இரட்சணிய ஆலய வாலிபரின் கூட்டம் 20-7-41 ஞாயிறு மாலை 4 மணிக்கு சபை குருவின் தலைமையில் ஆலயத்தில் கூடிற்று. அச்சமயம் சிஷ்ய சங்க சுர்றுக் காரியதரிசி



Mr. D. D. அனுக்ரகம் அவர்கள் சமீபத்தில் சென்னையில் கூடவிருக்கும் அகில இந்தியலுத்தரன் வாலிபர் மகாநாட்டைப் பற்றிக் கூறி மதுரை வாலிபர் அக்கூட்டத்தில் பங்கு பெறும்படி உற்சாகப்படுத்தினர், இச்சமயத்தில் இரட்சணிய ஆலயத்தின் சிஷ்ய சங்கத்துக்கு சபைக் குரு தலைவராகவும் திரு. A. தேவாசீர்வாதம் காரியதரிசியாகவும் திரு. A. சுந்தரம் பொக்கிஷதாரியாகவும் திரு. ஞானரத்தினமும் செல்வராஜமும் கமிட்டி அங்கத்தினராகவும் தெரிந்துகொள்ளப்பட்டார்கள். இக்கமிட்டியார் கூடி 'வாலிபரின் வேத ஆராய்ச்சிக் கூட்டம், சுவிசேஷ வேலை முயற்சி' முதலியவற்றைப்பற்றிய யோசனைகளை அடுத்த பொதுக் கூட்டத்தில் சமர்ப்பிக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

தலைவர் ஜெபித்து ஆசிகூற கூட்டம் முடிந்தது."

மதுரை, 6—8—41. } ஆ. தேவாசீர்வாதம், காரியதரிசி.

———:———

## திருச்சபை வர்த்தமானம்

### இளையாங்குடி "ஏசு குருநாதர் கோவில்" பிரதிஷ்டை

உலக முழுவதும் பயங்கர யுத்த காரணமாகக் கலங்கித் தவிக்கும் இக்காலத்திலும் ஏசு குருநாதரின் திருத்தொண்டு தடைபெறாது நடைபெற சாலைக் கிராமம் குருசேகரத்தைச் சார்ந்த இளையாங்குடி என்னும் ஓர் முஸ்லீம் சேரியில் அழகிய ஆலயம் "ஏசு குருநாதர் கோவில்" என்ற பெயரால், மகாகனம் தரங்கை அத்தியக்ஷர் சாந்தகிரீன் சாஸ்திரியாரவர்களால் 20-7-41 ஞாயிற்றுக்கிழமை காலை 9-32 மணிக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இதற்கு ஆயத்தமாக இம்மாதம் 18, 19-ம் தேதிகளில் சாலைக்கிராமம் குருசேகரச் சபையார் யாவரும் முறையே சிறுவாலை, வாணியக்குடி, சாலைக்கிராமம் முதலிய முக்கிய கிராமங்களிலுள்ள ஆலங்களில் குழுமி குறித்த நேரங்களில் மகாகனம் அத்தியக்ஷரவர்களால் சபை சந்திப்புப் பெறவும், ஏனைய சபையாரின் பக்தி வளர்ச்சிக் கேற்றவாறு அப்பெரியாரின் சமயோசித சன்மார்க்க சம்பந்தமான சொற்பொழிவுகளைக் கேட்கவும், அதன் பயனாக பல சபையினர் நற்பிரதிக்கினை செய்யவும் ஏவப்பட்டனர்.

ஞாயிறு 20-ம் தேதி அன்று காலை 9 மணிக்கு மகாகனம் அத்தியக்ஷரவர்களை இளையாங்குடியிலுள்ள பழைய குடிசைக் கோவிலிலிருந்து பல குருக்கள், மிஷன் ஸ்தானாதிபதிகள்,

ஹிந்து முஸ்லீம் நண்பர்கள், சபையார், பாடகர் குழாம் (அபிமானிகள் பலர் நன்கொடைகளாகக் கொடுத்த அழகிய ஆலயப் பணிமுட்டுகளைத் தங்கள் கைகளில் ஏந்திய வண்ணம்) மேள தாளம் பாடல்களுடன் இப்புதிய ஆலயத்திற்கு அழைத்து வந்து மும்முறை கோவிலைச் சுற்றி வலம் வந்தபின்னர், தாவீதின் திறவுகோலை உடையவரும், ஆரும் பூட்டக்கூடாமல் திறந்து, ஆரும் திறக்கக்கூடாமல் பூட்டுகிறவருமாகிய, பரிசுத்தமும், சத்தியமுமுள்ள ஏசு குருநாதர் நாமத்தில் மகாகனம் அத்தியக்ஷரவர்கள் ஆலயக் கதவுகளைத் திறந்து பல புதிய திருப்பணி முட்டுகளையும் முறைமையின்படி பிரதிஷ்டை செய்தார்கள்.

பிரதிஷ்டை ஆராதனையில் சங். ஓக்ஸ்பிளம், சாலமோன் தனராஜ், ஞானசிகாமணி, சாமுவேல் ஐயர்மார் பங்கெடுத்தனர். மகாகனம் அத்தியக்ஷரவர்கள் "புதிய எருசலேம்" என்ற பரிசுத்த பட்டணத்தின் மகத்துவத்தைக் குறித்து மகா எழுப்புதலான சுருக்கப் பிரசங்கமொன்று நிகழ்த்திய பின் சங். சாமுவேல் ஐயர் "நீங்கள் உலகத்திற்கு உப்புர், வெளிச்சமுமாயிருங்கள்" என்ற பொருளை ஆதாரமாக வைத்து திடப்படுத்தல் பெறவேண்டியவர்களுக்குப் புத்திப் பிரசங்கமொன்று செய்தனர். அன்று அவ்வாராதனையில், மகாகனம் அத்தியக்ஷரவர்கள் 5 பேருக்கு ஞானதீக்ஷையும் 18 பேருக்கு திடப்படுத்தலும் செய்தபின் பிரதிஷ்டை ஆராதனை முடிவுபெற்றது.

அதன்பின் இவ்வைபவத்திற்கென போடப்பட்ட பெரும் பந்தலில் மகாகனம் அத்தியக்ஷரவர்களுக்கும், சங். ஓக்ஸ்பிளம், சாமுவேல் ஐயர்மார் இருவருக்கும், இப்புதிய ஆலயம், கட்டப்பட சாஸ்வதமாய் தகுந்த நிலத்தை ஈந்த வள்ளல் ஸ்ரீமான் நா. நா. அ. இப்ராஹீம்ஷா ராவுத்தர் முதலிய பெரியாருக்கும் இளையாங்குடி சபையார் நாமத்தில் வரவேற்புப் பத்திரங்களும், ஞாபகச் சின்னங்களும் வழங்கப்பட்டன.

அவ்வமயம் மகாகனம் தரங்கை அத்தியக்ஷரவர்களுக்கு, பரமக்குடி, முதுகுளத்தூர், சாலைக்கிராமம் முதலிய குருசேகர ஊழியர்களால் பாதகாணிக்கையாக அத்தியக்ஷர் சகாய நிதிக்கென சேர்த்துக் கொடுக்கப்பட்டது ரூ. 62. அன்று சேர்க்கையான உண்டியல் ரூ. 8-6-1.

இறுதியில் மகாகனம் அத்தியக்ஷரவர்கள் ஆசீர்வாதம் கூற இப்பிரதிஷ்டைவிழா இனிய விருந்துடன் முடிந்தது. ஏசு குருநாதருக்கே மகிமை உண்டாவதாக.

இளையாங்குடி, 24-7-41. SAM. JOHN RAJA.



## ராமஞ்சேரி திருமுழுக்கு

இவ்வாண்டின் மிசியோன் தோஸ்திரப் பண்டிகை ராமஞ்சேரி குருசேகரத்திற்கு மெய்யாகவே ஒரு ஸ்தோத்திர தினமாக விளங்கிற்று. எப்படி எனில் அத்தினம் ராமஞ்சேரிக்கு 2 மைல் தூரத்திலுள்ள காரணி என்னும் கிராமத்தில் 34 ஆதி திராவிட இந்துக்களுக்கு திருமுழுக்கு செய்யப்பட்டது. இக்கிராமத்தில் நமக்கு ஏற்கனவே ஒரு பள்ளிக்கூடம் இருந்தும் இம்மட்டும் ஒரு கிறிஸ்தவ சபை ஸ்தாபிதமாகாமலிருந்தது.

திருவாளர் B. S. தாவீது பிரசங்கியார் ராமஞ்சேரி குருசேகரத்திற்கு மாற்றப்பட்டபின் இவர் இக்கிராமத்தாரை அடிக்கடி சந்தித்து அவர்களிடம் சுவிசேஷ வேலையும், வியாதியஸ்தரை சந்தித்து அவர்களுக்கு மருந்து கொடுக்கும் வேலையையும் செய்ததுடன், குடி ஜலத்திற்காக கஷ்டப்பட்டிருந்த அவர்களுக்காக மேலானவர்களிடம் மனுவின்மூலமாகவும் முகதாவிலும் விஷயத்தை தெரிவித்து அவர்களுக்கு குடிஜல கிணறு ஒன்று கட்டிக்கொடுக்கவும் ஏற்பாடு செய்தார்.

இதனால் அங்குள்ள சிலர், மனதில் ஒரு அசைவு உண்டாகி 34 பேர் தாங்கள் கிறிஸ்தவ சபையில் சேர்வதாக வாக்களித்தனர். இவர்களுக்கு கனம் பிரசங்கியாராலும், மீரியாம் பைபில் அம்மாளாலும் மற்றும் சில உபாத்திமார்களாலும் 6 மாத காலமாக ஞானபோதனை கொடுக்கப்பட்டது. பிறகு சபை குரு கனம் கார்ல் சாமுவேல் ஐயர் அவர்களும் அவர்களை அடிக்கடி சந்தித்து, அவர்கள் ஞான அறிவைப் பரீட்சித்தார். அவருக்கு திருப்திகரமாயிருந்தபடியால் இவ்வருட மிசியோன் ஸ்தோத்திர பண்டிகை தினத்தில் அவர்களுக்கு ஞானதீட்சை கொடுக்கலாம் என்று திட்டம் செய்துவிட்டார்.

இவ்வைபவத்தை சிறப்பிக்க கொண்டஞ்சேரி குருசேகர சபை குரு சங். C. G. Diehl ஐயர் அவர்களும் திருவாளர் J. S. ஆசீர்வாதம் பிரசங்கியார் அவர்களும் அழைக்கப்பட்டிருந்தனர். அன்று காரணியில் குருமார் இருவரும் பிரசங்கிமார் இருவரும் அங்கிகள் தரித்து முன்செல்ல, புதியதாய் ஞானஸ்னனம் பெறுவோரும் இந்துக்களும், உபாத்திமார்களும் பின்தொடர மேளவாத்தியத்துடனும் பஜனை கோஷ்டிகளுடனும் ஊர்வலம் வந்து சிறு ஆலயத்தின்முன் அலங்கரிக்கப்பட்டிருந்த பந்தலில் அமர்ந்தனர்.

1. ஆலய பிரதிஷ்டை. எல்லோரும் ஆலயத்தை சுற்றி வந்தபின் பிரசங்கிமார் இருவரும் 24ம் 121ம் சங்கீதங்களை

முறை முறையே வாசித்தபின் "தேவனே ஏகநாதனே" என்ற கீர்த்தனையை பாடிக்கொண்டு யாவரும் ஆலயத்திற்குள் பிரவேசித்து அமர்ந்தனர். கனம் Diehl ஐயர் அவர்கள் ஆலயத்தைப் பிரதிஷ்டை செய்து அதற்கு அடைக்கலநாதர் ஆலயம் என்ற நாமகரணம் சூட்டினர்.

2. திருமுழுக்கு. கனம் கார்ல் சாமுவேல் ஐயர் பீட ஆராதனை நடத்தி திருமுழுக்கு பெறுவோரைப் பரீட்சித்தபின்னர் இரு குருமாராலும் 34 பேருக்கு திருமுழுக்களிக்கப்பட்டது. சங். Diehl ஐயரவர்கள் புதியதாய் ஞானஸ்நனம் பெற்றோருக்கு நீங்கள் பார்த்ததையும், கேட்டதையும், ஜனங்களுக்கு அறிவியுங்கள் என்றும் நீங்கள் கொடுக்கும் சாக்ஷியினால் சபை அதிகமாக பெருக வேண்டும் என்றும் புத்தி புகட்டினர். ஆராதனை முடிந்தவுடன் வந்திருந்தோருக்கு ராமஞ்சேரி பிரசங்கியார் நன்றி வந்தனம் கூறினர். புதியதாய் ஞானஸ்நனம் பெற்றோருக்குப் பலர் கொடுத்த நன்கொடையினால் பகல் போசனமும் சிறுவர்களுக்கு மாத்திரம் வஸ்திர சகாயமும் நடந்தது. இச்சம்பவத்தை ஒட்டியே 8ம் 9ம் தேதிகளில் ராமஞ்சேரி குரு சேகர ஊழியரால் சுவிசேஷ வேலை ராமஞ்சேரியை சுற்றியுள்ள கிராமங்களில் நடைபெற்றது. அன்று இரவு காரணி என்னும் கிராமத்தில் திருவாளர் J. சாமுவேல் என்பவர் சகேயுவின் குணப்படுதலைப்பற்றி ஒரு பஜனை பிரசங்கம் நடத்தினர்.

இச்சபை ஸ்தாபிதமாக உதவிபுரிந்த அமலனுக்கே துதியும் தோஸ்திரமும் உண்டாவதாக! புதிய கிறிஸ்தவர்கள் விசுவாசத்திலும் ஞான ஜீவனிலும் வளர்ந்து தேறவும் இவர்கள் மூலமாய் அச்சபை பெருகவும் அமலன் அருள்புரிய அவரை மன்றாடுவோமாக!

ராமன்சேரி, 9—7—41. D. வேதமாணிக்கம்.

———:———

## தினசரி வேத வாசிப்பும், தியானமும்

1941 வேதபாகம் தேதி யாத்திராகமம் — தியானக் குறிப்பு.

செப்டம்பர்:

7 1 நாளா. 8 கடைசிக் கோத்திரமான பென்யமீன் கோத்திரம் பெருகும்படி ஆசீர்வதித்த தேவன் எவ்விதத்திலும் குறையுள்ளோராய்த் தோன்றும் தமது பிள்ளைகள் வளர்ந்தோங்கச் செய்வார்.



8 யாத். 1 அறியாத எஜமானரால் (வ. 8) வரும் துன்பத்தின் நடுவில் (வ. 11, 16) ஆண்டவரின் கை அவரது பிள்ளைகளைத் தாங்கி ஆதரிக்கும்.

9 2 மற்றோருக்கு ஒத்தாசை செய்ய ஆயத்த முள்ளோரை (வ. 13, 17) தேவன் தமது ஜனத்தின் தலைவராக்குகிறார் (யாத். 3·10).

10 3 தேவ ஊழியத்தை ஏற்போர் தேவ சத்தத்தைக் கேட்க ஆயத்தமும் (வ. 4) உத்தரவாதம் உணரத் தாழ்மையும் (வ. 11) உடையோராயிருத்தல் அவசியம்.

11 4 நீ குறைவுள்ளவனெனினும் (வ. 10) கிரியை நடப்பிக்கிறவர் தேவன் (வ. 12) என்பதை நம்பி, உன் ஊழியத்தைச்செய்.

12 5 தேவ ஊழியத்திற்குப் பலத்த இடையூறு ஏற்படுவதால் நீ சோர்வுறும்போது (வ. 23) ஆண்டவரின் கை அவைகளை விலக்கவல்லது (யாத். 6. 1) என்பதை மறவாதே.

13 6 என் துன்ப மிகுதியால் தலைவரை நம்பமுடியவில்லை (வ. 9), தலைவரும் குறைவுள்ள மனுஷர் (வ. 30)). என் சுமைகளை நீக்க வாக்கருளும் (வ. 9) தேவனைக்கூட நம்பலாகாதா?

14 7 ஆண்டவரின் பிள்ளைகளுக்குக் கஷ்டம் கொடுக்க மனதைக் கடினப்படுத்தாதே (வ. 13). மோசே, ஆரோனைப்போல் தேவ ஒத்தாசைபெற்று அவர்கள் கஷ்டத்தை நீக்கப் பணிவிடை செய் (வ. 5,6).

15 8 ஆபத்தில் கர்த்தரிடம் சகாயம்தேடி, பெற்றபின் அவரது வார்த்தையை அசட்டை செய்த குற்றம் என்னில் உண்டா?

16 9 பல விக்கினங்களைக்கண்டும் உன்மனது கடவுளிடம் திரும்பாதிருக்கிறதா?

17 10 தேவனுக்குச் செவிகொடாத இருதயம் பிசாசு, உலகம், மாம்சம் என்ற வெட்டுக்கிளிகளால் அரிக்கப்பட்டு, பாவ இருளால் சூழப்படும் ஸ்தலமே.

18 18·1-12·20 இயேசுவின் இரத்தத்தால் பாவ அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்பட்ட நான் நீக்கவேண்டிய புளித்தமா என்ன? (1 கொரி. 5·7,8 பார்).

19 12·20-15 பார்வோனைப்போல் பிசாசு நம்மைவிட மன தற்றிருந்தாலும், இரட்சகர் நம்மை மீட்டுத் தமது சேனைகளாக்குகிறார் (வ 41) என்று நம்புகிறாயா?

20 13 "பலத்தகை"யையுடைய என் கர்த்தருக்கு (வ. 3,9,14,16,21) எனக்கு முதன்மையான யாவற்றையும் ஒப்புவித்திருக்கிறேனா?

21 41 மீட்கப்பட்ட நம்மைப் பிசாசு (பார்வோனைப் போல்) தொடரும்போது தேவ கை வல்லமையாய் நம் மைக் காக்கும்.

22 15 நன்மைசெய்த உன் தேவனுக்கு ஸ்தோத்திரத் தைப் பலியிட்டு, உன்னதமானவருக்கு உன் பொருத் தனைகளைச் செலுத்து.

23 16 கிறிஸ்து உன் மன்னா; தேவ ஐக்யத்தை எப் போதும் அநுபவிக்க விரும்பும் ஆத்மப் பசியை அவரே தீர்ப்பார் (யோ. 6·32,36).

24 17 ஜபவீரனே ஜயவீரன் (வ. 4,6,11).

25 18 சபைக்குத் தலைவர் தேவை; அவர்களிடம் தேவ பயமும், உண்மையும், பொருளாசையின்மையும் அதனி னும் அவசியம் (வ. 21).

26 19 கடவுள் தெரிந்துகொண்ட மத்தியஸ்தரின் மூல மாக மட்டும் கடவுளிடம் நாம் சேரக்கூடும் (வ. 24); கிறிஸ்துவே புது உடன்படிக்கையின் மத்தியஸ்தர் (எபி. 12 : 19, 24).

27 20 உன் பாவத்தைக் கண்டிக்கத் தேவன் உன்னைச் சந்திக்கையில் (வ.20) நீ பாவத்தோடு விளையாடுவாயோ?

28 21 மீகா 6 : 8 பார்.

29 யாத். 22 என்னால் என் அயலான் நஷ்டமோ (வ. 12) கஷ்டமோ (வ. 22,25,26) அடையாதிருக்கக் கருத்தா யிருக்கிறேனா?

30 23 உன் அயலானுக்கு நியாயத்தையும் (வ. 6), தேவ னுக்கு நன்றியையும் (வ. 19) காண்பித்துத் தேவ சத் தத்திற்குச் செவிகொடு (வ. 21).

அக்டோபர்:

1 24 தேவனைத் தரிசித்த பின்பே உன் காரியங்களைக் கவனி (வ. 11).

2 25 என் இருதயம் ஆண்டவர் வசிக்கத்தக்க பரிசுத்த ஸ்தலமா? (வ. 8; 1 கொரி. 3·16). A. J. S.

———:———



*நான் கண்டது*

நான் தமிழ் நாட்டின் பல பாகங்களுக்கும் போய் அநேக மனுஷரையும், அவர்கள் வீடுகளையும், ஊர்களையும் பார்த்திருக் கிறேன். சில இடங்களில் நீண்டகாலம் தங்கிப் பல காரியங் களைக் கவனித்தேன். சில விஷயங்கள் எனக்கு மன நோவை உண்டாக்கின. வேறு சில காரியங்களைக் கண்டு மகிழ்ச்சி யடைந்தேன். அவைகளைப்பற்றிய சில குறிப்புகளை எழுதத் துணிந்தேன். அவைகளை அருணோதய வாயிலாய் வெளியிட உத்தேசித்தேன். பத்திராதிபர் அவைகளை ஒன்றில் அச்சிட லாம், அல்லது குப்பைத் தொட்டியில் போடலாம். எப்படி யானாலும் சரி, நான் வெவ்வேறு தலைப்புகளின்கீழ் என் மன தில் பட்டதை எழுதுகிறேன். அவற்றில் முதல் தலைப்புக்காக நான் தெரிந்துகொண்டது:

## வீடு

வீடுகள் வெளித் தோற்றத்தில் பல விதம். மண் சுவர் வைத்து பனை ஓலைகளாலோ, கீற்றுகளாலோ மூடப்பட்ட சிறு வீடுகளுமுண்டு, கற்சுவர்களோடு, பல அறைகள் அமைந்து, ஓடுகள் அல்லது தளங்கள் போட்ட வீடுகளும், மாடி வீடுகளும் பல உள. கட்டட பரீட்சையில் என் அனுபோகம் பூச்சியம். வீடு சிறியதாயிருந்தாலென்ன, பெரியதாயிருந்தாலென்ன? அதில் குடியிருக்கும் மனுஷரே முக்கியமென்பது என் அபிப் பிராயம். சில வீடுகளுக்கு நான் அதிகாலையில் போனபோது அங்குள்ள மனுஷரின் அகமகிழ்ச்சி முகமலர்ச்சியால் விளங் கிற்று. வேறு சில வீட்டாரின் முகம் கவலை நிறைந்ததாய்த் தோன்றிற்று. இதின் காரணத்தை அறிந்துகொள்ளும்படியாக சிறிது ஆராய்ச்சி செய்தேன். நான் இங்கு வரைந்தெழுதுவது கிறிஸ்தவர்களைப்பற்றியேயன்றிப் புற மதஸ்தரைக் குறித்தல்ல. கிறிஸ்தவர்கள் எக்காலத்திலும் அகமகிழ்ச்சியுள்ளவர்களாய்ப் பிழைக்க வேண்டுமென்பதே நான் எதிர்பார்ப்பது. ஆண்டவ ருடைய பிள்ளைகள் ராஜ புத்திரர்கள். ராஜா தமது பிள்ளை களுக்காகக் கவலைப்படுகிறார். அவர்களோடு ஒவ்வொரு நாளும் தமது வசனத்தினாலும், வேறு பற்பல சம்பவங்களாலும் பேசி, தமது வாக்குத்தத்தங்களைக்கொண்டு அவர்களைத் தைரியப் படுத்தி, அவர்களுக்குத் தமது ஆசீர்வாதங்களைக் குறைவின்றி அளிக்க விரும்புகிறார். தமது பிள்ளைகள் தின ஜெபத்தில் தம்மோடு பேசும் சிலாக்கியத்தையும் அளித்திருக்கிறார். ராஜ பிதாவின் திருப்பிரசன்னத்தை அனுதினமும் தேடிக் கண்டு பிடிக்கும் ராஜ பிள்ளை மனக் கிலேசத்தோடும் கவலையோடும்

காலங்கழிப்பது சரியா? இப்படி மனச் சோர்வுள்ளவர்கள் ராஜ பிதாவின்மேல் நம்பிக்கை இழந்தவர்கள், அவருக்கு அவகீர்த்தி உண்டுபண்ணுகிறவர்களென்றே சொல்லவேண்டும். ஐயையோ! எத்தனை கிறிஸ்தவர்கள் தின வேத தியானமும், தின ஜெபமுமின்றி காலங்கழிக்கிறார். சிலர் வீடுகளில் வேத புத்தகமில்லை, ஜெபப் பழக்கமுமில்லை. அவைகள் வீடுகளல்ல காடுகளே. அங்கே சீறும் தொனியும், உறுமும் சத்தமும், ஊளையின் ஓசையும் இருப்பது ஆச்சரியமல்ல.

சில வீடுகளில் சங்கீத தொனி கிளம்புவதைக்கேட்டு ஆனந்தப்பட்டேன். பாட்டு நிறைந்த வீடு மோட்ச வீட்டை நினைப்பூட்டிற்று. சில வீடுகளில் மனுஷரிருந்தும் சத்தமேயில்லை, பிள்ளைகளிருந்தும் சந்தடியில்லை. கல்லறைத் தோட்ட ஞாபகம் எனக்குவந்தது.

சில வீடுகளில் பேச்சு சத்தம் அதிகமிருந்தது. உற்றுக் கேட்கும்போது என் மனதிற்கு அதிக வேதனையுண்டாக்கிற்று. பிறரைக் குறித்து குறை கூறுதலும், பிறரிடம் எப்படிப்பழி வாங்கலாமென்னும் யோசனைகளும், இன்னும் வாயில் பிறக்கத்தகாத அசுத்த பேச்சுகளும் நாற்றக்குழியிலிருந்து எழும்பும் துர்க்கந்தம்போல் கிளம்பினது எனக்கு ஆறாத் துயரத்தையுண்டாக்கிற்று. தேவவசன வாசிப்பும், ஜெபப்பழக்கமுமில்லாத வீடுகளின் நிலைமை இவ்வாறிருப்பது விபரீதமல்லவே.

சில வீடுகளில் மிகவும் அமைதியாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். கஷ்ட நிலைமையிலிருக்கும் சிலருக்குத் தாங்கள் எவ்வாறு ஒத்தாசை செய்யலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தார்கள். தங்களை வெளிப்படுத்திக் கொள்ளாமலே உதவியை இரகசியமாய் அனுப்பிவிட ஒழுங்கு செய்தார்கள். அன்று குடும்ப ஜெபத்திலும் தனிஜெபத்திலும் அவர்களை நினைவு கூர்ந்தார்கள்.

சில வீடுகளிலுள்ளோர் அசமந்தராகவும், வேறு வீடுகளிலுள்ளோர் சுறுசுறுப்புள்ளவர்களாகவும் விளங்கினார்கள். சோம்பரின் வீடுகளில் மூதேவி வசிப்பதுபோலவும், சலியாமல் உழைப்போரின் வீடுகளில் சீதேவி வசிப்பதுபோலவும் தோன்றிற்று.

நமது ஆண்டவர் நமது வீடுகளில் வாசம்பண்ணி, நமது யோசனைகளையும் பேச்சையும் செய்கைகளையும் ஆண்டு நடத்தி நமது பரம சந்தோஷம் நமது வீடுகளில் என்றும் நிலைக்கத் துணைபுரிவாராக.

B. P.

———:———



# DANISH MISSION

Editor: Rev. Gna. Vedakan, Cuddalore N. T.

## செய்திகள்

**ரவீந்தரநாத் தாகூர்:** இந்தியாவின் கவிச் சக்ரவர்த்தியாய் விளங்கிய டாக்டர் தாகூர் 7-ஆ யில் 80வது பிராயத்தில் இவ்வுலக வாழ்வைவிட்டு மறைந்தார். அவர் 9 பிராயத்திலேயே கதை எழுத ஆரம்பித்தவர்: தமது கவிகள் கதைகளையெல்லாம் அநேகமாகத் தமது தாய் மொழியாகிய வங்காளத்திலேயே எழுதியிருக்கிறார். உலகப் பிரசித்திபெற்ற "கீதாஞ்சலி" யையும வங்க பாஷையில் எழுதி, பின்பு அதைத் தாமே ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்தார். ஆங்கிலத்திலும் பாண்டித்திய திறமையுடன் பாட்டுக்களை எழுதி, ஆங்கிலரும் உலக கல்விமான்களும் புகழத்தக்க நோபல் பரிசை 1913யில் பெற்றார். இதன்பின்தான் அவருடைய அருமை பெருமைகளை நாம் அறிந்து அவரை பாராட்டத் துவக்கினோம். அவர் இயற்றித் தந்திருக்கும் கவிகளும், தேச மக்களின் ஆசாரத்திற்கும் அபிவிருத்திக்கும் ஏற்ற முறையில் பயன்படத்தக்க கல்வியை அளிக்க, ஸ்தாபித்திருக்கும் "சாந்தி நிகேதனம்" ஆஸ்ரம சர்வ கலாசாலையும் அவரை உலகத்திற்கு சிரஞ்சீவியாக்கியிருக்கிறது. இவர் தேசாபிமானி; தேச மக்களின் ஒற்றுமையையும் உலக மானிட சகோதரத்துவத்தையும் கருதினவர்; அன்பு உருகிய இருதயத்துடன் பிறர் நல இன்ப வாழ்வை நாடி பேருபகாரியாகவும் விளங்கினர்.

* * * *

**வில்லிங்டன் பிரபு:** சென்னையிலும், பம்பாயிலும் கவர்னராகவும், இந்தியாவின் வைஸ்ராயாகவும் இருந்து, பின்னால் கானடாவுக்கு சிறிது கால கவர்னர்-ஜெனரலாகவும், சமீபத்தில் ஆஸ்திரேலியாவுக்கு பறந்து சென்ற வில்லிங்டன் பிரபு லண்டனில் சில நாள் வியாதிக்குப்பின் மரணமடைந்தார். இவர் திறமையான பிரிட்டிஷ் ராஜதந்திரி. மாபெரும் பொதுஜன சேவகராய் விளங்கினார்.

* * * *

**S. G. தானியேல்:** ஈ ப்டம் என்ற பாலர் பாடம் முதல் எட்டாவது வகுப்பு வரையில் தமிழ் வாசகப் புஸ்தகங்களை எழுதியவரும், வயது கடந்தவர்கள் எழுதப் படித்தலை வற்புறுத்தி

எளிய நூதன முறையை ஆராய்ச்சியுடன் பயன்படும்படி வெளிப்படுத்தியவரும், இரவு பாடசாலைகளின் பயிற்சியை ஆதரித்தவரும், கிறிஸ்தவ பக்தி நூல்கள் அநேகம் இயற்றியவரும், தஞ்சையில் அநேக ஆண்டுகளாக நல்மதிப்புக்கும் பயன்படும்படியான ஜீவியம் நடத்திவந்த பெரியார் S. G. தானியேல் B.A. அவர்கள் 4உ யில் பரம வாசஸ்தலத்திற்குள் பிரவேசித்தனர். இவரது வாசக புஸ்தகங்களை நமது மிஷன் ஆரம்ப பாடசாலைகளில் விருப்பத்துடன் இதுவரையில் உபயோகித்து வந்தோம். நமது பொதுக் கூட்டங்களில் அடிக்கடி உபந்நியாசிக்கவும் வந்தது நமக்கு ஞாபகமிருக்கும். இவரது தாழ்மை, சுறுசுறுப்பு, கல்வித் திறமை, கிறிஸ்தவ ஞானம், அன்பின் நற்கிரியை இவைகளினால் தென் இந்திய கிறிஸ்தவ வீரர்களில் இவரும் ஒருவராவார்.

* * * *

வைஸராயின் நிர்வாக சபை ஏற்கனவே ஏழு ஸ்தானங்கள் உள்ளது, ஜூலை 21உ முதல் பதினொரு ஸ்தானங்களாக யுத்த சம்பந்தமாக வேலை அதிகமாகிவிட்டபடியால் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஏழு இந்திய பிரமுகர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களுடைய வருஷ சம்பளம் தலைக்கு ரூ. 66,000..

———:———

## சபைகளின் செய்திகள்

ஜெனரல் அஸெம்பிளி: சபைகளின் மகாநாடு செப். 5, 6, 7 தினங்களில், திருவண்ணாமலையில் நடைபெறும். மேன்மை தங்கிய சான்டிகிரீன் அத்தியக்ஷர் காலை மாலை வேத தியானமும் ஞாயிறு ஆராதனை பிரசங்கமும், ஸ்ரீ C. J. லூக்காஸ் அவர்கள் "சபையும் சுவிசேஷ ஊழியமும் என்பதின்பேரின் 4 உபந்நியாசமும், சுதேச மிஷனெரி சங்க ஊழியத்தைப்பற்றி கனம் S. ஞானபரணம் ஐயரும் பேசுவார்கள்.

* * * *

காலஞ்சென்ற தேவதாஸ் பெரியவர். பட்டாம் பாக்கம் சபை ஆரம்ப கனம் ஓக்ஸ் ஐயர் காலமுதல் அங்கு வசித்துவந்த தேவதாஸ் என்ற பெரியார் தமது 91 பிராயத்தில் முதிர்ந்த வயதில் ஜூலை-மீ 31உ பரமராஜ்யத்தில் சேர்ந்தார். இவரது அடக்க ஆராதனை ஆலயத்திலும் கல்லறைத் தோட்டத்திலும் நடந்தபின், அவருடைய குமாரர் கனம் ஐஸக் தேவதாஸ் போதகரால் அடக்கம் செய்யப்பட்டது. இவருக்கு சிறு பிராய முதல் பாட்டு, வேதவசனம், ஆராதனை இவைகளின் பேரி



லுள்ள பிரீதியையும் இவரிடம் காணப்பட்ட அமைதி, உண்மை, சுறுசுறுப்பு குணாதிசயங்களைப்பற்றியும் எடுத்துப் பேசினர்.

———:———

## சபைகளின் சேர்ப்பின் பண்டிகை

கர்மேல்–திருவண்ணாமலை: ஆகஸ்டு மீ 2உ சனிக்கிழமை ஸ்தோத்திர ஆராதனையில் கனம் ஐஸக் தேவதாஸ் போதகர் பிரசங்கிக்க, பின்னால் பல விற்பனைகள் நடந்தது. ஸ்தோத்திர பீடகாணிக்கையிலும் விற்பனைகளிலும் சேர்ந்த தொகை ரூ. 154.

கடலூர்: ஆகஸ்டு 2உ பிற்பகலில் நடந்த ஸ்தோத்திர ஆராதனையில், சிதம்பரம் கனம் D. A. ஜேக்கப் போதகர் தேவனுக்கு நன்றி செலுத்துதலைப்பற்றிப் பிரசங்கித்து பீட ஆராதனை நடத்தினார். சபையார் தங்கள் ஒரு நாள் வருமான காணிக்கை செலுத்தினர். ஆராதனையின் பின் சிற்றுண்டிசாலையும் பொருள்களின் விற்பனையும் தோட்டத்தில் ஒழுங்கு செய்திருந்தது. ஸ்ரீ ஹென்றி மனுவேல் அவர்கள் சப் மேஜிஸ்டிரேற், டேனிஷ் மிஷன் நடத்தும் எல்லா வேலைக்கும் இந்த யுத்த காலத்தில் சகலருடைய உதவி அவசியம் என்று பேசி, விற்பனையைத்திறந்து வைத்தார். சபையார் குறைவாயிருப்பதாலும், யுத்தகால வறுமையினாலும் விற்பனைக்குவந்த பொருள்கள் கொஞ்சமே. சிற்றுண்டிசாலைக்கு ஸ்திரிகள் உற்சாகமாய் பலவித பலகார தினுசுகள் அனுப்பி நடத்தினர். மூன்று கன்று குட்டிகள் அதிர்ஷ்ட சீட்டு மூலமாய் ரூ. 28க்கு விற்கப்பட்டது. திருச்சி டாக்டர் மதுரம் இச்சபைக்கு வருஷா வருஷம் அனுப்பும் மருந்து தினுசுகள் மூலம் ரூ. 7 வருமானம் சேர்ந்தது. சில இந்து சிநேகிதர்களும் இதர சபை சிநேகிதர்களும் விற்பனையை ஆதரித்தனர். மொத்த வருமானம் ரூ. 92.

சென்னை: ஆகஸ்டு-மீ, 7உ, வியாழக்கிழமை சபையின் வருஷாந்தர ஸ்தோத்திரப் பண்டிவக, கொண்டாடப்பட்டது. இது கவர்ன்மென்று விடுமுறை தினமாதலால், சபையார் யாவரும் வந்து பண்டிகை ஆசரிக்கக்கூடியதாயிருந்தது.

சென்ற வருஷத்தில், சபைக்கும், தனித்தனி குடும்பங்களுக்கும், ஆண்டவர் அருளிய ஆசீர்வாதங்களை உணர்ந்து, ஸ்தோத்திரம் செலுத்தும் மனோ. வாஞ்சையை ஒவ்வொருவர் உள்ளத்திலும் எழுப்பிவிடவும், ஆராதனை, காணிக்கை முதலிய விஷயங்களை ஒழுங்குபடுத்தி பண்டிகையை சரிவர நடத்தி

வைக்க, சபை பரிபாலன சங்கத்தார், பன்னிரண்டுபேர் கொண்ட ஒரு கமிற்றியை, இரண்டு மாதத்திற்கு முன்னரே ஏற்படுத்தினர். இந்தப் பன்னிரண்டுபேரில், ஆறுபேர் ஸ்திரிகள்.

ஏறக்குறைய 100 குடும்பங்கள் மாத்திரம் உள்ள இச்சிறு சபை சென்னை நகர் முழுவதிலும் பரவியிருக்கின்றனர். ஆகவே இவர்களை, அவரவர் வீட்டில் சாவதானமாய் சந்தித்து ஒவ்வொருவரும் செய்யவேண்டியதை அவர்களுக்கு சொல்லி அவர்களின் ஒத்துழைப்பைப் பெறுவது சிறிது கஷ்டம். ஆதலின் சென்னை சென்னை நகரத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும், ஓர் சிறு கமிற்றியை ஏற்படுத்தி, இவ்வகையாய் எல்லாருக்கும் பண்டிகையின் காரியாதிகளை நாங்கள் ஒரு மாதமாக பிரஸ்தாபித்துக்கொண்டு வந்தோம்.

பண்டிகையின் முக்கிய அம்சம் ஸ்தோத்திர ஆராதனை, பண்டிகை ஆராதனையில் சங்கை D. L. Ross ஐயர் அவர்கள், எபிரெயர் 13 : 16 நன்மை செய்யவும், பகிர்ந்து கொடுக்கவும் மறவாதிருங்கள், இப்படிப்பட்ட பலிகள் கடவுளுக்கு பிரியம் என்ற திரு வசனத்தின்மேல் பிரயோஜனமும், எழுப்புதலுமான பிரசங்கம் செய்தார்கள். ஞானப் பாட்டுகளின் இசைவான இனிய கீதங்கள், பள்ளிக்கூடத்து பிள்ளைகளின் பலவிதப் பாடல்கள், தனிப்பாட்டுகள் இவைகள் ஆராதனையைப் பரவசமாக்கினது.

காணிக்கைக்கென்று, அச்சிட்ட உறைகள் முன்னமே கொடுக்கப்பட்டிருந்தது. இவைகளில் இரண்டு நாள் வருமானத்திற்குக் குறையாமல் வைத்து பீடத்தில் செலுத்துவது தகுதியான காணிக்கையாகும் என்று, ஆலோசனையாக சொல்லப்பட்டிருந்தது. கின்னர கீதத்தொனி முழங்க; அவரவர் தங்கள் காணிக்கை உறைகளை பக்தி விநயமாய் பீடத்தில் செலுத்தினர்.

பின்னர் ஏல விற்பனை, அதிர்ஷ்ட பெட்டி, பலகாரக்கடை முதலிய வேடிக்கைகள் விமரிசையாய் நடந்தன. பல விதத்திலும் காணிக்கையாக சேர்ந்த தொகை ரூ. 280 இதர நன்கொடைகளாக கிடைத்தது ரூ. 40. ஆக ரூ. 320, சபையின் ஆதரவுக்கென்று கிடைத்தது, ஒரு அம்மாள் ரூ. 50 ஒரு உறையில் வைத்து செலுத்தினார்கள். இவர்கள் ஆஸ்தியுடையவர் என்று சொல்லமுடியாத. தசம பாகம் கொடுக்கப் பழகினவர்கள். இப்போது மாத்திரம் அல்ல, எப்போதும், உதாரமாயும், முக மலர்ச்சியோடும் கொடுப்பார்கள். மற்றவர்களும் இந்த



நல்ல பழக்கத்தை அனுசரித்தால், சபைக்கு அதிக உதவியாயிருக்கும்.

பண்டிகையில் சிரத்தை யெடுத்து ஒத்தாசை செய்த அனைவருக்கும், வந்தனம் அளிக்கிறோம் ஆண்டவருக்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக.

E. V. LITE, Sectry. D. M. C. C.—Madras.

———:———

## ஆக்ரமிப்பின் கால சம்பவங்கள்

(ii) ஜனத்தொகை குறைக்க மலடாக்குதல். போலாண்டு தேசத்து பாடசாலை மாணவர் 14, 15 பிராய ஆண் பெண் பிள்ளைகள் அடிக்கடி பள்ளிக்கூடங்களிலிருந்து ஜெர்மெனிக்கு கூட்டம் கூட்டமாய் அனுப்பப்பட்டனர். ஏதோ உல்லாச பயணம், ஊர் சுற்றிப் பார்த்தல் என்பதாகப் பிள்ளைகள் உற்சாகத்துடன் போய்க்கொண்டிருந்தனர். ஜெர்மெனியில் தங்கியிருக்கும் 3, 4 வாரங்களில் அவர்களுக்கு திரேக பலம் அதிகரிக்கச் செய்ய ஊசி மருந்து ஏற்றுகிறார்களாம். இது தங்களுக்கு அவதியாயிருக்கிறதென்று பிள்ளைகளின் சில கடிதம் பெற்றோருக்கு வருவதுண்டு. குத்தும் மருந்து திரேக பலத்துக்கல்லவாம்: அவர்கள் வாலிப திசையில் குடும்ப வாழ்க்கையில் மக்கட்பேறு இல்லாமல் மலடு ஆவதற்காக இதைச் செய்கிறார்களாம். போலாண்டு ஜாதியார் விர்த்தியின்றி ஒரு தனி பலத்த ஜாதியார் என்று உலகில் ஏற்படாதபடி ஜன விர்த்தியைக் குறைக்க நவீன முறையை கையாளுகிறார்களாம்!

(Madras Mail, 10—8—41.)

(iii) ஜெர்மன் குழந்தைகள் வெளியே, ஸ்லோவாக்கியத் தொழிலாளிகள் உள்ளே: மேற்கு ஜெர்மெனி, ரூரில் மிதமான யுத்த முயற்சி தொழிற்சாலைகளையும் பட்டணத்தையும் பிரிட்டிஷ் விமானங்கள் நாசம் செய்து வருவதால், அங்குள்ள ஜெர்மென் குழந்தைகள் 35,000 பேரைக் காப்பாற்ற ஸ்லோவாக்கியாவுக்கு அனுப்பியிருக்கின்றனர்: அதே சமயத்தில் 30,000 ஸ்லோவாக்கிய தொழிலாளிகள் ஜெர்மெனியில் உழைப்பதற்கு நிர்ப்பந்தத்தின்பேரில் அனுப்பப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் நூற்றுக்கணக்கானவர்கள் பிரிட்டிஷ் குண்டு வீச்சுதலைத் தாங்க முடியாமல் தப்பியோடி சொந்த ஊருக்கு வர முயலுகையில் ஜெஸ்டபோ போலீஸ் தடுத்து கைது செய்கிறார்களாம்.

(Jang-Ki-Khabron, 8-8-41.)

(iv) சில ஜெபத்திற்கு தடை உத்தரவு: ஸெக்கோவில் உபயோகித்து வரும் சில கீதங்களையும் ஜெபங்களையும் ஜெர்மென் அதிகாரிகள் தடுத்திருக்கிறார்கள். விசேஷமாய், திருவிருந்து ஆராதனையின் பின்னால் வந்த ஜெபம் ஒன்றில், "ஆத்துமாக்களை அழிக்க உலகத்தில் அலைந்து திரியும் சாத்தானையும் அவனோடு சேர்ந்த இதர அசுத்த ஆவிகளையும் நரக ஆக்கினையில் போடும், ஸ்வாமி" என்பது, ஹிட்லர் மஹானையும் அவரது அதிகாரிகளையும் இது சுட்டிக் காட்டுகிறதென்று குற்றஞ் சாட்டுகிறார்கள். இதற்காக ஒரு குருவை ஒரு வண்டியை இழுக்க வைத்து, பக்கத்தில் ஜெர்மென் வீரன் சவுகுடன் நடத்தினராம். ஸெக்கோ ஆஸ்பத்திரிகளில் வியாதிபட்ட குருமார், கன்னியாஸ்திரிகளுக்கு சிகிச்சைக்கு இடம் கொடுக்கக்கூடாதென்றும் உத்தரவு போட்டிருக்கிறதாம். போப்பிடமிருந்து வரும் சில தபால்கள் குருமாருக்கு கொடுக்கப்படுகிறதில்லையாம். ஒரு ஆலய ஆதீன குருமாரை சிறைக்கு நடத்திப் போகையில் சேவர் சிலரை வயிற்றில் உதைத்தும இழுத்தும் சென்றனராம். தப்பியோடிய ஒரு வயோதிக குருவைத் தலையில் சுட்டுக் கொன்றனராம். தேவதூஷண ஒரு வாசகத்தை கைத் துப்பாக்கி பயமுறுத்தலுடன் ஒரு குருவை வாசிக்கச்செய்து, மற்ற குருமார் அதைக் கேட்கும்படி செய்தனராம். (தொடரும்)

(Madras Mail, 14-8-41.) GNA. V.

---:---

புத்தக மதிப்புரை: டிச்பள்ளிக் குஷ்டரோகிகள் (The Lepers of Dichpali) ஸ்ரீமதி Dermott Monahan அம்மாள் ஆங்கிலத்திலெழுதி திரு. V. A. வெங்கடாசாரி மொழி பெயர்த்து 126 பக்கங்களும், 8 படங்களும் உள்ளதாய் C. L. S. சங்கத்தாரால் மிகவும் சுத்தமாகவும் இனிய தமிழ் நடையிலும் அச்சிடப்பட்ட நூல். விலை 10 அணாதான். குஷ்டவியாதியினால் பீடிக்கப்பட்ட நிர்ப்பந்தர் தேவசேயராகிப் பாக்கியமான ஜீவியம் செய்வதை இந்நூல் விவரிக்கிறது. இதை வாசிப்போர் தன்னயமற்ற அன்பினூழியம் செய்ய ஏவுதலடைவார்கள் என்பதிற் சந்தேகமில்லை.

---

**Book Review:** The Kingdom of God, by H. V. Martin M. A., B D., 129 pages. Price 8 As. The author treats the subject in a very comprehensive manner. The book is a well planned study which will be of real value to groups and individuals seeking after a deeper understanding of the subject. It is well indexed and documented. Apply to the C. L. S. Madras.

**All India Convention** of the **India Sunday School Union** will be held jointly with **The India Christian Endeavour Union** and the **United Provinces Joint Convention of Sunday Schools, Christian Societies and Prem Sabhas** at the Lucknow Christian College From Friday Evening 17th October to Tuesday 21st October. The theme of the Convention is **Christ, The Child, and the Church.** Registrations may be made with the Convention Secretaries:—Rev. H. R. Wilson, Parker High School, Moradabad, Mr. V. M. Koshy, Velteric, Hinoo, Ranchi.

---

## THE NEXT LUTHERAN RADIO SERVICE

On Sunday the 21st September (7-50 A. M. to 8-15 A.M.) the All India Radio, Trichy, will broadcast our Lutheran Zion Church service. The service will have purely Indian Songs and **Cand. S. Devanesan B. A., B. D.,** will make a short sermon.

செப்டெம்பர்-மீ 21உ யாகிய ஞாயிறு காலை 7-50 முதல் 8-15 வரையில் திருச்சியிலுள்ள அகில இந்திய ஆகாசவாணி நிலையத்திலிருந்து நமது லுத்தரன் தேவாராதனை ஒலிபரப்பப்படும், திரு. S. தேவநேசன் பிரசங்கியார் B. A., B. D., சுருக்க பிரசங்கம் செய்வார். இந்திய இராகங்களிலேயே தேவாராதனை நடைபெறும்.

---

It is a pity that there are still several subscribers to the Arunodayam in arrears of their subscriptions, causing great inconvenience to the management. They are requested to send their subscriptions to the undersigned without any further delay.—அருணோதய சந்தாவை இன்னும் பலர் பாக்கிவைத்திருப்பது கஷ்டமுண்டாக்குகிறது. இனி காலதாமதமின்றித் தங்கள் சந்தா பாக்கியை அடியிற் கண்ட விலாசத்துக்கு அனுப்பிவைக்கக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

Clock Tower, Trichy
23—8—1941

S. GNANAMANICKAM,
*Editer.*

Registered No. M. 1979

